[15th December 1961

அறிய விரும்புகிறேன். ஸ்டேட் ஸ்காலர்ஷிப் 28 லட்சத்திலிருந்து 60 லட்சமாக ஆக்கப்பட்டிருக்கிறது. எல்லா ஹரிஜன மாணவர்களுக்கும் இது கொடுக்கப்படுகிறதா ?

THE HON. SRI P. KAKKAN : ஹரிஜன மாணவர்களில் சிலர் விண்ணப்பம் போடும்பொழுது சில டிபெக்டுகள் இருக்கின்றன. அந்த மாதிரி கேஸ்களில் கொடுப்பது கிடையாது. எந்த விண்ணப்பம் சரியாக இருக்கிறதோ அதற்குக் கொடுக்கப்படும்.

SRIMATHI SATHIYAVANIMUTHU : அமைச்சர் அவர்கள் பதிலில் பிற்பட்ட மக்களைவிட ஹரிஜன மக்களுக்குத்தான் வீட்டு மனை தருவதிலும், மற்றும் பல பொருளாதார உயர்வு கொடுப்பதன் காரணமாக கல்விச் சலுகை குறைக்கப்பட்டிருக்கிறது என்று சொன்னார்கள். ஒதுக்கப்படுகிற தொகை பூரணமாக கல்விக்காகச் செலவழிக்கப்படவில்லை என்று புகார் வந்திருக்கிறதா ? எனவே சாதாரண சலுகைகளைக் குறைத்து கல்விக்கு பூரணமான சலுகையைக் கொடுப்பதற்கு சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI P. KAKKAN : ஸ்காலர்ஷிப் கொடுப்பதைப்பற்றி தான் நான் சொன்னேன். பாக்வர்டு கம்யூனிட்டியில் அதிகமான மாணவர்கள் இருப்பதினால் அதிகமான அளவுக்கு ஸ்காலர்ஷிப் கொடுக்கிறோம். ஹரிஜன மாணவர்கள் கொஞ்சமாக காலேஜ்களிலே படிப்பதால் அவர்களுக்கு எவ்வளவு ஒதுக்கவேண்டுமோ அவ்வளவும் ஒதுக்குகிறோம். மேற்கொண்டு கொடுப்பதற்கும் முயற்சி செய்து வருகிறோம்.

THE HON. SRI C. SUBRAMANIAM : காலேஜ்களைப் பொறுத்த வரையில் எல்லா ஹரிஜன மாணவர்களுக்கும் ஸ்காலர்ஷிப் கொடுக்கப்படுகிறது. ஒருவருக்குக் கூட கொடுக்காமல் இருப்பது கிடையாது. ஆனால் பாக்வர்டு வகுப்பில் ஒரு பகுதியினருக்குத் தான் கொடுக்கிறோம். பாக்வர்டு வகுப்பு மாணவர்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கிற காரணத்தினால், ஹரிஜன மாணவர்கள் காலேஜில் படிப்பதைவிட பிற்பட்ட வகுப்பு மாணவர்களின் தொகை அதிகமாக இருக்கிறது. ஒரு ஹரிஜன மாணவருக்குக்கூட ஸ்காலர்ஷிப் இல்லை என்று சொல்லவில்லை. இன்னும் எத்தனை ஹரிஜன மாணவர்கள் கல்லூரிக்குப் போனாலும், அவர்கள் எல்லோருக்கும் ஸ்காலர்ஷிப் கொடுக்கப்படும் என்பதை உறுதியாகச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

*Agricultural Income-tax*

* 2410 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether there is any proposal to extend the slab rate of Agricultural Income-tax to small landholders in the Kanyakumari district also; and

(*b*) if so, the reasons therefor?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) None at present.

(*b*) Does not arise.

15th December 1961]

**SRI T. S. RAMASWAMI :** இப்படி நிலம் வழங்கும் முறையை அனுசரிக்கும்போது கன்யாகுமரி ஜில்லாவில் ஒரு மாதிரியாகவும் இதர ஜில்லாக்களில் ஒரு மாதிரியான முறையும் வழங்கப் படுகிறதே. அம்மாதிரி இல்லாமல் ஒரு மாதிரியாக வழங்குவதற்கு இந்த அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறீர்கள் என்பதை அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI M. A. MANICKAVELU :** இதில் மாத்திரம் ஒரு மாதிரியாக இல்லை. இப்படியே ஒவ்வொரு விஷயத்திலும் வேறு மாதிரியாகத்தான் இருந்து வருகிறது. அதையெல்லாம் கவனித்துச் செய்யப்படும். (சிரிப்பு.)

*Assignment of lands.*

* 2411 *Q.*—SRI M. S. SELVARAJAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) how many landless poor persons have been assigned poramboke land for cultivation during the year 1960–61 and 1961–62 districtwise; and

(*b*) the extent of poramboke lands available for cultivation?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) A statement [a] giving the number of persons and the total extent assigned in each district during the 2 years 1960 and 1961 (up to 31–7–1961) is placed on the table of the House. The figures furnished relate to all assignable lands including porambokes.

**SRI M. S. SELVARAJAN :** மேஜையின் மீது வைக்கப்பட்டிருக்கிற ஸ்டேட்மெண்டில் திருநெல்வேலி ஜில்லாவில் 60-ம் வருஷத்திலும் 61-ம் வருஷத்திலும் கொடுக்கப்பட்ட நிலத்தின் அளவு கொடுக்கப்பட்டிருக்கிறது. அதைப் பார்க்கும்போது அங்கே கொடுக்கப்பட்டிருக்கும் நிலத்தின் அளவு நிலம் பெற்ற நபர்கள் எண்ணிக்கை குறைவாக இருக்கிறதே, அதன் காரணம் என்ன? சாதாரணமாக நிலம் வழங்குவதில் விசேஷமான தடைகள் ஏதாவது இருக்கிறதா என்பதைப்பற்றி அரசாங்கம் அறிவிக்குமா?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** கனம் அங்கத்தினர் திருநெல்வேலி ஜில்லாவில் கிடைக்கக்கூடிய நிலத்தைப் பார்த்தால் அவருக்கு இது நன்றாகத் தெரியும். அங்கே கிடைக்கக்கூடிய நிலம் மிகவும் குறைவாக இருக்கிறது. ஆகையால்தான் அதற்குத் தகுந்த மாதிரி நிலம் வழங்குவதும் குறைவாக இருக்கிறது. அங்கு ஆர்ஜிதம் செய்திருப்பதைப் பார்த்தால் இது நன்றாகத் தெரியும். அங்கு 25 ஆயிரம் 20 ஆயிரம் எக்கர் தான் ஆர்ஜிதம் செய்யப்பட்டிருக்கிறது. அதனால் தான் அங்கு குறைவாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

**SRI P. G. MANICKAM :** கோயம்பத்தூர் ஜில்லாவில் ஜுலை மாதத்திலிருந்து இது வரையிலும் 57,691 சொச்சம் ஏக்கர் தானே ஆர்ஜிதம் செய்யப்பட்டிருக்கிறது. நில ஆர்ஜிதத்திற்கு என்று

---

a Printed as Appendix XII on page 1104 infra.